27th April 1962]

**Sri A. P. DHARMALINGAM:** திருச்சி மாவட்டத்தில் சிமெண்ட் உற்பத்திக்கு தேவையான அளவு ஜிப்சம் மற்றும் மூலப் பொருள்கள் அதிகமாக கிடைப்பதால் அங்கிருந்து மற்ற மாவட்டங்களுக்கு கொண்டு செல்லப்படுகிறது. ஆகையால் திருச்சி மாவட்டத்தில் கிடைக்கும் ஜிப்சத்தைக் கொண்டு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த அரசாங்கம் முயற்சி எடுக்குமா?

**The Hon. Sri R. VENKATARAMAN:** சிமண்ட் உற்பத்தி செய்வதற்கு மிகவும் முக்கியமான மூலப்பொருள் சுண்ணும்புக்கல். ஜிப்சம் மிகவும் சொர்ப்பமான அளவில் செலவிடப்படுகிறது. அதனால் இதைக்கொண்டு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த முடியாது. சுண்ணும்புக்கல்தான் அதிக அளவில் தேவை.

**Sri A. ARUMUGAM:** வட ஆற்காடு மாவட்டத்திலும் ஒரு சிமெண்ட் தொழிற்சாலை ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா?

**The Hon. Sri R. VENKATARAMAN:** கனம் அங்கத்தினர் அவர்கள் ஒரு சிமெண்ட் தொழிற்சாலை வைப்பதற்கு என்னென்ன மூலப்பொருள்கள் கிடைக்கும், எங்கே கிடைக்கும் என்பதைத் தெரிந்து சொன்னல் சர்க்கார் அவருக்கு நன்றி செலுத்தும்.

*Handloom industry (Financial Corporation)*

* 15 *Q.*—Sri V. S. S. MANI: Will the Hon. the Minister for Industries be pleased to state whether the State Government has any proposal to form a finance corporation to help the handloom industry?

The Hon. Sri R. VENKATARAMAN: Yes, Sir.

Sri V. S. S. MANI: On 30th September 1961 the Hon. Sri R. Venkataraman inaugurated a meeting to form a Handloom Finance Corporation sponsored by the Director of Handlooms, Madras. Is it a fact that Central Government did not take interest in the matter and had neglected South in this regard?

**The Hon. Sri R. VENKATARAMAN:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹாண்ட்லூம் பைனன்ஸ் கார்பொரேஷன் ஏற்படுத்தவேண்டுமென்று ராஜ்ய சர்க்காருடைய யோசனை. இதில் சற்றேரக்குறைய மொத்தம் 40 லட்சம் ரூபாய் மூலதனம் போடவேண்டும். இதில் சர்க்கார் 10 லட்சம் மூலதனம் போடுகிறார்கள். மற்றவை இந்தத் தொழிலிலே ஈடுபட்டுள்ளவர்கள் செலுத்த வேண்டும். இந்த பைனன்ஸ் கார்ப்பொரேஷன் ஏற்படுத்துவதற்கான பூர்வாங்க நடவடிக்கை எடுத்தாகிவிட்டது. ஆனல் இதில் ஒரு புதிய சட்ட பிரச்னை தோன்றியது. இது டிரேடிங் கார்ப்பொரேஷனக இருக்கவேண்டுமா அல்லது பாங்கிங் கார்பொரேஷனக இருக்கவேண்டுமா என்பதுதான். இந்த இரண்டு விஷயங்களும் பரிசிலனையில் இருக்கிறது. இதனல்தான் காலதாமதம் ஏற்படுகிறது.